5th November 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Licences have been granted to members of Jaggery manufacturing Co-operative Societies to tap Coconut trees for neera for the manufacture of Jaggery in the Coimbatore district only.

(*b*) The answer is in the negative.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, சேலம் மாவட்டத்திலே பதனீர் விற்பனையானது ஒரு குறிப்பிட்ட இடத்திலே நடக்கவேண்டுமென்று உத்திரவு போடப்பட்டிருக்கிறது. அந்த மாதிரி இருப்பதனால், பதனீர் விற்காமல் பாதிக்கப்படுவதால் எல்லா இடங்களிலும் விற்கலாம் என்ற முறையில் உத்திரவு போடப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், தென்னையிலிருந்து பதனீர் இறுக்குவதிலே, ஏற்கெனவே கள் இறக்கியவர்கள் அதிகமாக இருக்கிற காரணத்தினால், பதனீர் இறக்க உத்திரவு கொடுத்தால், வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டதற்கு ஒப்பாக ஆகாதா ? இனி தென்னை மரத்திலிருந்து பதனீர் இறக்குவதை தடை செய்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முதலிலேயே கோவை மாவட்டத்தில் மட்டும் அனுமதிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னேன். கனம் அங்கத்தினர் சொன்ன காரணத்திற்காகத்தான் மற்ற மாவட்டங்களுக்கு விஸ்தரிக்கவில்லை.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : இந்த பனை மரத்தில் பதனீர் இறக்க லைசென்ஸ் வழங்குவதன் காரணமாக தஞ்சை ஜில்லாவிலே உள் பக்கத்திலே சுண்ணாம்பு தடவினால் பதனீராகவும், சுண்ணாம்பு தடவாவிட்டால் கள்ளாகவும் ஆகி மது விலக்குக் குற்றங்கள் அதிகமாகின்றதால், இதையெல்லாம் விசாரணை செய்து பனை மரத்தை பதனீர் இறக்க குத்தகைக்கு விடக்கூடாது என்று உத்திரவு போடுவார்களா ? மேலும் பதனீர் இறக்குவதால் மதுவிலக்கு குற்றங்கள் அதிகமாக இருக்கின்றன என்ற காரணத்தினால் பனை மரத்திற்கு இந்த லைசென்ஸ் கொடுக்கும் முறை ரத்து செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜில்லா பிளானிங் கமிட்டி கூட்டத்தில் இன்னும் இதை விஸ்தரிக்கவேண்டுமென்ற யோசனை கூறப்பட்டது. விஸ்தரிக்கப்பட்டால் தவறுகள் ஏற்படும் என்றுதான் விஸ்தரிக்கப்படவில்லை.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த பதனீர் இறக்குவதற்கு கொடுக்கப்படும் லைசென்ஸ் வரவாக் குறைந்துகொண்டே வருகிறது. இதில் அரசாங்கத்தின் திட்டவட்டமான கொள்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தவறுதல்களுக்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதுதான் அரசாங்கத்தின் கொள்கை. அது குறைந்தால் இது குறையாது. தவறுதல்கள் அதிகமானால், லைசென்ஸ்கள் குறையத்தான் குறையும்.

*Town-Planning Schemes.*

* 884 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether all Municipalities in this State have submitted Town-Planning Schemes under section 8 of the Madras Town-Planning Act, 1920?

[5th November 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : The Corporation of Madras has prepared and sumbitted a Preliminary General Development Plan for the City of Madras which is under scrutiny of the Director of Town-Planning. The other municipalities have not yet finalised the General Town-Planning Scheme.

SRI N. K. PALANISAMI : இந்த ராஜ்யத்தில் 20 லட்சம் பேர்கள் இருக்கக்கூடிய சேரிகளையெல்லாம் ஒரு பக்கத்தில் அமைக்க ஒரு திட்டத்தைப் போட்டிருக்கிறார்கள். இருபது லட்சத்துக்குமேல். பாக்கி இருக்கக் கூடிய ஜனங்களை எந்த வகையில் குடி அமைக்கப் போகிறார்கள் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதை கொஞ்சம் கொஞ்சமாகத்தான் செய்யவேண்டும். ஒரேயடியாக எல்லாப் பகுதி களிலும் செய்ய முடியாது. இப்போது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத் திலே 78·11 லட்சம் இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. சென்னையில் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. மற்ற முனிஸிபாலிடிகளில் இன்னும் தயாரிக்கப்படவில்லை.

9-50 a.m. SRI N. K. PALANISAMI : சர்க்காருக்கு திட்டம் சமர்ப்பிப்பதில் தாமதம் ஏற்படக் காரணம் என்ன என்பதை கனம் அமைச்சர் சொல்லு வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: பணம் இல்லாததினாலும், அதற்கு வேண்டிய டெக்னிகல் எக்ஸ்பெர்ட்டுகள் இல்லாததினாலும்தான்.

*Tondi Port*

*885 Q.—SRI S. RAMAKRISHNA THEVAR: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இராமநாதபுரம் ஜில்லாவில் திருவாடானைத் தாலூக்காவில் உள்ள தொண்டித் துறைமுகத்தை அபிவிருத்தி செய்யும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

(ஆ) அப்படியானால், எப்பொழுது ?

THE HON. SRI P. KAKKAN : (a) No, Sir.

(b) Does not arise.

SRI S. RAMAKRISHNA THEVAR : இந்தத் தொண்டித் துறைமுகம் பல ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன்பாகவே மிகவும் சரித்திரப் பிரசித்திபெற்ற ஒரு துறைமுகமாக இருந்திருக்கிறது. இந்த துறைமுகத்தைப்பற்றி சிலப்பதிகாரம் போன்ற நூல்களிலே . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் கேள்வி போடவேண்டும். பழைய சரித்திரத்தை எல்லாம் ஏன் இப்பொழுது சொல்லவேண்டும் ? (சிரிப்பு.)

SRI S RAMAKRISHNA THEVAR : 45 வருடங்களுக்கு முன்பாக இந்தத் துறைமுகத்திற்கும் இலங்கைக்கும் . . .

MR. SPEAKER : நான் சொன்னதை கனம் அங்கத்தினர் கேட்க வில்லை. அங்கத்தினர் என்ன கேள்வி கேட்கவேண்டுமென்று நினைக் கிறாரோ அதைக் கேட்கலாம். நாற்பது, ஐம்பது வருஷங்களுக்கு முன்பு இருந்ததை யெல்லாம் இப்பொழுது சொல்லவேண்டாம். (மேலும் சிரிப்பு.)

SRI S. RAMAKRISHNA THEVAR : இந்தத் துறைமுகத்தை அபிவிருத்தி செய்ய வேண்டும். ஏன் அந்தமாதிரி செய்யக்கூடாது என்று தான் கேட்க விரும்புகிறேன். சுமார் 45 வருஷங்களுக்கு முன்பு இந்தத் துறைமுகத்திற்கும் இலங்கைக்கும் . . .